10th September 1958]

*Appointment of Chief Secretary to a Central Board of Enquiry*

* 126 *Q.*—**Sri N. K. PALANISAMI :** கனம் முதலமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சில முந்திரா கம்பெனிகளில் ஆயுள் இன்ஸூரன்ஸ் கார்பொரேஷன் செய்த முதலீடுகள் சம்பந்தமாக சில அதிகாரிகளின் நடத்தையைக் குறித்து சக்ளா கமிஷன் செய்த தீர்ப்புக்களின் அடிப்படையில் விசாரணை செய்வதற்கான விசாரணை போர்டில் சென்னை ராஜ்யத்தின் பிரதம காரியதரிசியை அங்கத்தினராக நியமிக்க மத்திய அரசாங்கத்துக்கு சிபாரிசு செய்யப்பட்டிருக்கிறது என்பது உண்மையா ?

(ஆ) அப்படியானால், அப்பதவிக்கான நிபந்தனைகளும் கொடுக்கப் படப்போகிற சம்பளமும் என்ன?

The Hon. Sri C. SUBRAMANIAM : (*a*) No. The State Government did not recommend the name of the Chief Secretary for appointment to the Board of Enquiry. The Government of India requested the State Government to depute the officer to serve on the Board of Enquiry. The State Government agreed to the request of the Government of India.

(*b*) The officer is permitted to proceed to Delhi in connection with the Board of Enquiry and the above period is treated as on tour. He is allowed to draw the travelling allowance at the rate applicable to officers of the Madras Government. The expenditure in regard to the travelling allowance of the officer is met by the Government of India.

Sri V. K. RAMASWAMY MUDALIYAR : May I know, Sir, in the absence of the Chief Secretary, who is attending to his work?

The Hon. Sri C. SUBRAMANIAM : Sir, he is considered to be on tour. Therefore no alternative arrangement has been made. As far as possible, important files are sent to him if it is considered necessary that he should see them. Otherwise, the next senior officer looks into the files.

*Meenakshiamman temple, Madurai*

* 127 *Q.*—**Sri N. R. THIAGARAJAN :** கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

மதுரை மீனாட்சியம்மன் கோயில் வெளி மதிலைச் சுற்றியுள்ள காலியிடத்தை நான்கு பக்கத்திலும் கடைகள் வைத்து வாடகைக்கு விட அரசாங்கத்துக்கு ஏதேனும் உத்தேசமுண்டா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : No, Sir.

**Sri N. R. THIAGARAJAN :** கோவிலைச் சுற்றியுள்ள பகுதிகளைக் கடைகள் வைப்பதற்கு கேட்டால் அதை வாடகைக்குக் கொடுத்துவிட்டால், கோவிலிற்கு இப்பொழுது வருமானம் போதாமல் இருப்பதால், அதனால் லட்சக்கணக்கான ரூபாய் வருமானம் கிடைக்கும் என்பதால் அதை அரசாங்கம் பரிசீலிக்குமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** வருமானத்தை எதிர்பார்த்து அசௌகரியம் செய்வதை விட அந்த இடத்தில் பூந்தோட்டம் அமைப்பது என்பது இப்பொழுதுள்ள யோசனை.